10937



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2018 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2018 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2018

06.08.2018 / 0830 - 10.30

ඉස්ලාම් I
இஸ்லாம் I
Islam I

44 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
*Two hours*

அறிவுறுத்தல்கள் :
* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என எண்ணிடப்பட்ட விடைகளில் **சரியான அல்லது மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** அல்லாஹ்வின் திருநாமங்களில் படைப்பாளன் என்பதைக் குறிக்கும் சொல்
(1) அர்ரஹ்மான் (2) அர்ரஸ்ஸாக் (3) அல்காலிக்
(4) அல்குத்தூஸ் (5) அஸ்ஸலாம்



**2.** பின்வருபவர்களில் உலுல் அஸ்ம்களில் அடங்கும் நபி
(1) இஸ்மாயில் (அலை) (2) இப்ராஹீம் (அலை) (3) தாவூத் (அலை)
(4) யூஸுப் (அலை) (5) லூத் (அலை)

**3.** உம்மஹாத்துல் மு.்மினீன்களில் அதிகமான ஹதீஸ்களை ரிவாயத் செய்தவர்
(1) ஆயிஷா (ரழி) (2) ஸவ்தா (ரழி) (3) கதீஜா (ரழி)
(4) ஹப்ஸா (ரழி) (5) ஸைனப் (ரழி)



**4.** ஹஜ் நிறைவேற்றப்படும்போது கல்லெறியும் சடங்கு இடம்பெறும் இடம்
(1) க.்பா (2) மர்வா (3) ஸபா
(4) மினா (5) அறபா

**5.** தப்ஸீர் கலையில் நிபுணத்துவம் பெற்றோர்
(1) முஹத்திஸீன் (2) முஜ்தஹிதீன் (3) முஅல்லிமீன் (4) முஜத்திதீன் (5) முபஸ்ஸிரீன்

**6.** பின்வருவனவற்றுள் அர்கானுல் கியாஸில் **அடங்காதது**
(1) அஸ்ல் (2) பர்உ (3) இஜ்திஹாத் (4) இல்லத் (5) ஹுகும்

**7.** குத்பாவுடன் இடம்பெறும் பர்ளான கூட்டுத்தொழுகை
(1) ஸலாத்துல் குஸுபைன் (2) ஸலாத்துல் இஸ்திஸ்காஉ
(3) ஸலாத்துல் ஈதைன் (4) ஸலாத்துல் ஜும்ஆ
(5) ஸலாத்துல் இஸ்திகாரா

**8.** அல் - குர்ஆன் தொகுப்பு முயற்சியில் கூடுதலாக பங்கெடுத்துக் கொண்ட ஸஹாபி
(1) முஆத் (ரழி) (2) முஸ்அப் (ரழி) (3) உஸ்மான் (ரழி)
(4) ஸைத் (ரழி) (5) ஜ.்பர் (ரழி)

**9.** கலீபா உமர் இப்னு அப்துல் அஸீஸ் அவர்களின் தூண்டுதலால் ஹதீஸ் தொகுப்பு முயற்சியை ஆரம்பித்தவர்
(1) இமாம் ஸுஹ்ரி (2) இமாம் சுயூத்தி
(3) இமாம் அபூதாவூத் (4) இமாம் அப்துல்லா இப்னு முபாரக்
(5) இமாம் இப்னு மாஜா

**10.** நேரடியான சட்ட ஆதாரங்கள் கிடைக்காதபோது, காழி சுய அனுமானத்தின் மூலம் வழங்கும் தீர்ப்பு
(1) ஹுதூத் (2) கிஸஸ் (3) த.்ஸீர் (4) ஜினாயத் (5) கத்ல்

11. 'அல் ஜிஹாத் பில் மால்' என்பதில் அடங்குவது
(1) உளப்போராட்டம் (2) அரசியல் போராட்டம் (3) பிரசாரப்பணி
(4) உயிர்த்தியாகம் (5) பொருள் தியாகம்

12. 'ஸலாத்துல் குஸூபைன்' இடம்பெறும் சந்தர்ப்பம்
(1) கிரகணம் நிகழும்போது (2) நன்மையை எதிர்பார்க்கும்போது
(3) வரட்சி நீடிக்கும்போது (4) மழை தேடும்போது
(5) பெருநாளன்று காலையில்

13. 'பைத்துல் மக்திஸ்' திசையிலிருந்து 'பைத்துல்லாஹ்வின்' திசைக்கு கிப்லா மாற்றப்பட்டதன் நினைவாக அமைந்துள்ள மஸ்ஜித்
(1) மஸ்ஜித் நமிரா (2) மஸ்ஜிதுல் ஹராம்
(3) மஸ்ஜிதுல் கிப்லதைன் (4) மஸ்ஜிது குபா
(5) மஸ்ஜிதுந் நபவி



14. கசையடித் தண்டனை வழங்கப்படும் இரு குற்றங்கள்
(1) விபசாரம், களவு (2) கொலை, முர்தத்
(3) களவு, கொலை (4) மது அருந்துதல், அவதூறு சொல்லல்
(5) கொள்ளை, விபசாரம்

15. பின்வருபவருள் அஜ்னபியாக உள்ளவர்
(1) மாமனின் மகள் (2) தாயின் சகோதரி (3) மகனின் மனைவி
(4) மனைவியின் தாய் (5) தந்தையின் மகள்

16. இலங்கை முஸ்லிம்களில் பெரும்பான்மையோர் கடைப்பிடிக்கும் அகீதா பிரிவு
(1) தஹாவிய்யா (2) மு.்.தஸிலா (3) அஷ்அரிய்யா
(4) ஜ.்.பரிய்யா (5) மாத்ருதிய்யா

17. கருத்து வேறுபாடின்றி எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட இஜ்மா
(1) இஜ்மா சுகூத்தி (2) இஜ்மா ஸரீஹ்
(3) இஜ்மா அக்ஸரிய்யா (4) இஜ்மா நக்லி
(5) இஜ்மா இஜ்திஹாதி

18. பின்வருபவருள் ஸஹாபி **அல்லாதவர்**
(1) ஹஸன் பஸ்ரி (2) பிலால் ஹபஷி (3) சுஹைப் ரூமி
(4) ஸல்மான் பார்ஸி (5) அபூதர் கிபாரி

19. நபி மூஸா (அலை) நபி இப்றாஹீம் (அலை) ஆகியோருக்கு எதிராக செயற்பட்ட மன்னர்கள் முறையே
(1) ஜாலூத், பிர்அவ்ன் (2) நம்ருத், அஸீஸ்
(3) பல்கீஸ், பிர்அவ்ன் (4) நம்ருத், ஜாலூத்
(5) பிர்அவ்ன், நம்ருத்

20. இமாமுல் அ.்.ழம் என்றும் இமாமுல் மதீனா என்றும் அழைக்கப்பட்ட இரு இமாம்கள் முறையே
(1) அபுஹனீபா, மாலிக் (2) புகாரி, முஸ்லிம்
(3) ஷாபிஈ, ஹனபீ (4) குர்துபி, ஜவ்ஸி
(5) நஸஈ, திர்மிதி

21. பின்வரும் ஸூறாக்களில் 'தர்தீப் திலாவத்' ஒழுங்கில் அமைந்துள்ள ஸூறாக்கள்
(1) பாத்திஹா, இக்லாஸ், அந்நாஸ் (2) இக்லாஸ், பலக், அந்நாஸ்
(3) பகரா, பாத்திஹா, நிஸாஉ (4) யாஸீன், முல்க், ஹஷ்ர்
(5) அலக், முத்தஸ்ஸிர், முஸ்ஸம்மில்

22. இறந்துபோன கணவனுக்காக மனைவி 'இத்தா' இருப்பதற்கு மிகப் பொருத்தமான காரணம்
(1) துக்கம் அனுட்டித்தல் (2) பொறுமை காத்தல்
(3) கணவனுக்காக பிரார்த்தித்தல் (4) கருத்தரிப்பை உறுதி செய்தல்
(5) அல்லாஹ்வின் கட்டளையை நிறைவேற்றல்

23. ஸுன்னத்தான நோன்பு நோற்பதற்கு தடுக்கப்பட்ட நாட்கள்
(1) ஷவ்வால் 2, 3 (2) முஹர்ரம் 9, 10 (3) துல்ஹஜ் 11, 12
(4) ஷ.்.பான் 14, 15 (5) றஜப் 27, 28

[பக். 3 ஐப் பார்க்க

**24.** உம்றா நிறைவேற்றப்படும் ஒழுங்கை சுட்டும் தெரிவு யாது?
(1) ஸஈ, இஹ்றாம், முடிகளைதல், தவாப்
(2) தவாப், முடிகளைதல், ஸஈ, இஹ்றாம்
(3) முடிகளைதல், தவாப், இஹ்றாம், ஸஈ
(4) இஹ்றாம், தவாப், ஸஈ, முடிகளைதல்
(5) இஹ்றாம், ஸஈ, முடிகளைதல், தவாப்

**25.** பின்வருவனவற்றுள் அல்லாஹ்வின் பண்புகளை குறிக்கும் தொகுதியினை தெரிவு செய்க
(1) ஜாஹிலுன், பனாஉன், அஜ்துன், மவ்துன்
(2) கதீமுன், வாஹிதுன், காதிருன், ஹய்யுன்
(3) கியானத், கித்புன், பலாதத், கித்மான்
(4) பதானத், இல்முன், கித்புன், பனாஉன்
(5) பதானத், ஸித்குன், தப்லீக், அமானத்

**26.** வுழுச் செய்வதற்கு சுத்தமான நீரைப் பெறுவது
(1) ஸுன்னத் (2) பர்ளு (3) வாஜிப்
(4) ஷர்த்து (5) மக்றூஹ்

**27.** அபூஜஹ்ல் பின்வரும் எந்தப் பிரிவில் அடங்குவான்?
(1) முர்தத் (2) முனாபிக் (3) முஸ்லிம்
(4) முல்ஹித் (5) முஷ்ரிக்

**28.** பின்வருபவருள் நபி(ஸல்) அவர்களின் வளர்ப்பு மகன்
(1) காஸிம் (2) ஸைத் (3) இப்றாஹீம் (4) அலி (5) அப்துல்லாஹ்

**29.** பின்வருவனவற்றுள் மணமக்களை வாழ்த்தும் துஆ
(1) ஷபாக்கல்லாஹ் (2) பி அமானில்லாஹ்
(3) பாரகல்லாஹ் பீகும் (4) ஜஸாகல்லாஹு கைரன்
(5) இன்ஷா அல்லாஹ்

**30.** இலங்கை முஸ்லிம்களின் கல்வி மறுமலர்ச்சிக்காக பாடசாலைகளை அமைத்த முன்னோடி யார்?
(1) எம்.சி. சித்திலெப்பை
(2) கசாவத்தை ஆலிம்
(3) எம்.ரீ. அக்பர்
(4) ஆலிமுல் அரூஸ்
(5) சேர். ராஸிக் பரீத்

**31.** இமாம் புகாரி(ரஹ்) முஹத்திஸ்களில் உயர்ந்தவராகக் கணிக்கப்படுவதற்கான காரணம்
(1) ஹதீஸ்களைத் திரட்டியமை
(2) ஹதீஸ்துறை மாணவர்களை உருவாக்கியமை.
(3) ஸஹீஹ் புகாரியை தொகுத்தமை.
(4) ஹதீஸ்களைத் திறனாய்ந்து வகுத்தமை.
(5) பல பிரதேசங்களுக்கும் சென்று ஹதீஸ்களை திரட்டியமை



**32.** முஜ்தஹித் முதலக் என்ற தரத்திலுள்ள இரு இமாம்கள்
(1) ஔஸாயி, ழாஹிறி (2) மாலிக், ஷாபிஈ
(3) சுயூத்தி, குர்துபி (4) தாரமி, பைஹகி
(5) ஷைபானி, அபூயூசுப்

- **33** தொடக்கம் **36** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் **X, Y** எனும் நிரல்களின் கீழ் தரப்பட்டுள்ள தகவல்கள் ஏதேனும் ஒரு வகையில் ஒன்றுடனொன்று தொடர்புடையவை. அதன்படி **Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுடன் சரியாக தொடர்புபடுத்தும்போது பொருத்தமாக அமையும் சேர்மானத்தைத் தெரிவு செய்க.

**33.**

| X | Y |
|---|---|
| யவ்முல் ப.்.ஸ் | A - தீர்ப்பு வழங்கும் நாள் |
| யவ்முல் ஹிஸாப் | B - ஒன்று திரட்டும் நாள் |
| யவ்முத்தீன் | C - கணக்கு கேட்கும் நாள் |
| யவ்முல் ஹஷ்ர் | D - எழுப்பப்படும் நாள் |

(1) A B C D (2) A C B D (3) B A C D (4) C D A B (5) D C A B

10937

**34.**

| X | Y |
|---|---|
| கபாஅத் | A - மணமுடிக்க அனுமதிக்கப்பட்டவர் |
| அஜ்னபி | B - மணமகளின் தந்தை |
| மஹ்ரமி | C - மணமுடிக்க அனுமதிக்கப்படாதவர் |
| வலி | D - பொருத்தப்பாடு |

(1) ABCD (2) ACDB (3) BCDA (4) CDAB (5) DACB

**35.**

| X | Y |
|---|---|
| இல்முன் | A - சக்தியுள்ளவன் |
| பஸீருன் | B - மரணம் |
| காதிருன் | C - அறிவு |
| மவ்துன் | D - பார்ப்பவன் |

(1) ABCD (2) ADCB (3) BCDA (4) CDAB (5) DBAC

**36.**

| X | Y |
|---|---|
| இல்முல் ஹதீஸ் | A - இமாம் முஸ்லிம் |
| இல்முத் தப்ஸீர் | B - இமாம் ஷாபிஈ |
| இல்முல் பிக்ஹு | C - இமாம் ராஸி |
| இல்முல் அகாஇத் | D - இமாம் அஷ்அரி |

(1) ABCD (2) ACBD (3) ADBC (4) BCDA (5) CDAB

**37.** பின்வரும் விடயங்களை கவனத்திற் கொள்க.

A – இம்மை மறுமை இரண்டுக்கும் வழிகாட்டுகிறது.

B – உலகைத் துறந்து வாழ வழிகாட்டுகிறது.

C – வாழ்வின் அனைத்து துறைகளுக்கும் வழிகாட்டுகிறது.

D – நெகிழாத் தன்மையைக் கொண்டுள்ளது.

E – அடிப்படை மூலாதாரங்களைக் கொண்டது.

F – மனித முயற்சியால் மட்டும் உருவானது.

மேலுள்ளவற்றுள் இஸ்லாத்தின் சிறப்பம்சங்களை உள்ளடக்கிய தொகுதி

(1) A, B, C (2) A, C, E (3) B, C, D (4) B, D, F (5) C, D, E

**38.** பின்வருவனவற்றைக் கருதுக.

A – துஆஉலிப்திதாஹ் ஓதுதல்

B – றுகூஉவில் தஸ்பீஹ் செய்தல்

C – வுழூஉ செய்தல்

D – இஃதிகாப் இருத்தல்

E – ஸலவாத்தில் அஸ்ஹாபுகளைச் சேர்த்தல்



மேற்குறிப்பிடப்பட்டுள்ளவற்றுள் தொழுகையின் ஸுன்னத்துகளில் அடங்குபவை

(1) A, B, C (2) A, B, E (3) B, C, D (4) C, D, E (5) D, E, C

**39.** மனிதன் நிறைவேற்ற வேண்டிய இபாதத், கிலாபத், இமாரத் பணிகள் சில வருமாறு

A – அல்லாஹ்வின் கட்டளைகளை நிறைவேற்றல்

B – நீர் நிலைகளை அசுத்தப்படுத்தல்

C – சுற்றாடலை அழகுபடுத்தல்

D – பெற்றோருக்குரிய கடமைகளை நிறைவேற்றல்

E – ஆட்சிக்கு விசுவாசமாக நடத்தல்

F – தொழுகை நோன்பு போன்ற கடமைகளை நிறைவேற்றல்

மேற்குறிப்பிட்டவற்றுள் இபாதத் பணிகளுடன் தொடர்பானவை

(1) A, B, C (2) A, D, F (3) B, C, D (4) C, D, F (5) D, E, F

[பக். 5 ஐப் பார்க்க

**40.** ஒருவர் முச்சக்கர வண்டியொன்றில் குறிப்பிட்ட தூரத்துக்கு பயணம் செய்து ஒரு தொகைப் பணத்தை சாரதிக்குக் கொடுக்கிறார். இந்தச் செயற்பாடு
(1) அல்பைஉ (2) ஸம்ஸரா (3) அல்கர்ழ் (4) அல்இஜாரா (5) அர்ரிபா

**41.** ஒரு தரப்பினர் மூலதனத்தையும் மற்றொரு தரப்பினர் உழைப்பையும் வைத்து மேற்கொள்ளப்படும் வணிக முயற்சி
(1) முஸாரஆ (2) ஸலம் (3) முஷாரகா (4) முழாரபா (5) பைஉல் முஅஜ்ஜல்

**42.** பாவத்தில் விழுந்து விடுவோமோ என்ற பயத்தில் சந்தேகமானவற்றிலிருந்து **தவிர்த்துக்** கொள்வது
(1) தஸ்கியா (2) தக்வா (3) ஸுஹ்து (4) வரஉ (5) தவ்பா

**43.** மு∴தஸிலா இயக்கத்தின் தாபகராக் கொள்ளப்படுபவர்
(1) வாஸில் பின் அதா
(2) அபுல்ஹஸன் அஷ்அரி
(3) அப்துல் காதிர் ஜீலானி
(4) கஸ்ஸாலி
(5) ஸர்ஹிந்தி

**44.** இலங்கைக்கு இஸ்லாத்தின் தூதைக் கொண்டு வந்தவர்
(1) இப்னு பதூதா
(2) இப்னு ஷஹ்ரயார்
(3) வஹப் இப்னு ஹப்ஸா
(4) காலித் பின் பகாயா
(5) மாப்பிள்ளை ஆலிம்

**45.** மணமகளுக்குரிய தகுதியை இழந்தவர்
(1) முஸ்லிமாயிருப்பவர்
(2) பெண்ணாக இருப்பவர்
(3) அஜ்னபியாக இருப்பவர்
(4) கற்புள்ளவராயிருப்பவர்
(5) மற்றொருவரின் மனைவியாயிருப்பவர்

- **46** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்களில் இரண்டு வகையான கூற்றுகள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் தரப்பட்டுள்ள சோடிக் கூற்றுகளுக்குப் பின்வரும் (1), (2), (3), (4), (5) என்பனவற்றில் மிகப் பொருத்தமானதைத் தெரிவு செய்து அதன் **இலக்கத்தைக்** குறிப்பிடுக.

| **இலக்கம்** | **முதலாம் கூற்று** | **இரண்டாம் கூற்று** |
|---|---|---|
| (1) | சரியானது. | சரியானது. |
| (2) | சரியானது. | பிழையானது. |
| (3) | பிழையானது. | பிழையானது. |
| (4) | பிழையானது. | சரியானது. |
| (5) | சரியானது. | முதலாம் கூற்றை மேலும் விளக்குகிறது. |

| | **முதலாம் கூற்று** | **இரண்டாம் கூற்று** |
|---|---|---|
| **46.** | ஈமானும் அமலும் ஒன்றோடொன்று பிணைந்திருக்க முடியாதவை. | பர்ளு ஐன், பர்ளு கிபாயா ஆகிய இரண்டும் எல்லோராலும் தனித்தனியாக கட்டாயமாக நிறைவேற்றப்பட வேண்டியவை. |
| **47.** | இல்ஹாத் கோட்பாடு இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் காணப்பட்டது. | அப்துல்லா இப்னு உபை முனாபிக்களில் ஒருவனாவான். |
| **48.** | கவாரிஜ்கள் ஸிப்பீன் போரின்போது தோற்றம் பெற்றனர். | மக்கீ, மதனீ வசனங்கள் கருத்திலும் மொழியமைப்பிலும் ஒரே தன்மையைக் கொண்டவை. |
| **49.** | ஐ.எல்.எம். அப்துல் அஸீஸ் சித்தி லெப்பையின் பணியைத் தொடர்ந்தார். | ஹதீஸ்களில் முதவாத்திரான ஹதீஸ்கள் மிகப் பலமானவை. |
| **50.** | "நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்புதாரிகள். உங்கள் பொறுப்புப் பற்றி மறுமையில் விசாரிக்கப்படும்." என்பது ஹதீஸாகும். | அரசபணியில் ஈடுபடுவோர் உரிய நேரத்தில் சமூகமளித்தலும் உரிய பணியை நேர்த்தியாக செய்வதும் கடமையாகும். |

***

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2018 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2018 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2018

ඉස්ලාම් II
இஸ்லாம் II
Islam II

44 T II

07.08.2018 / 0830 - 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි.
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

**அறிவுறுத்தல்கள் :**

* பகுதி **I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் உரித்தாகும்.

## பகுதி I

**1.** பின்வரும் சோடிச் சொற்களுக்கிடையிலான வேறுபாட்டை எடுத்துக்காட்டுக.
(i) தௌஹீத் ருபூபிய்யா - தௌஹீதுல் உலூஹிய்யா
(ii) ஷிர்க் அக்பர் - ஷிர்க் அஸ்கர்
(iii) கதரிய்யா - ஜபரிய்யா
(iv) மு.'.தஸிலா - அஷ்அரிய்யா

**2.** முஸ்லிம் சமூக அமைப்பிலும் சமூக நலனிலும் பின்வருவனவற்றின் பங்கை தெளிவுபடுத்துக.
(i) ஜமாஅத் தொழுகை
(ii) ஸகாத்
(iii) திருமணம்
(iv) வாரிசுரிமை

**3.** பின்வருவோர் இஸ்லாத்துக்கு ஆற்றிய பங்களிப்புகளைச் சுருக்கமாக எடுத்துக்காட்டுக.
(i) வரகதிப்னு நௌபல்
(ii) இமாம் ஷாபிஈ
(iii) அபுல் ஹஸன் அஷ்அரி
(iv) எம்.ஸீ.சித்திலெப்பை



## பகுதி II

**4.** (i) வஹி என்றால் என்ன?
(ii) நபி (ஸல்) அவர்களுக்கு, முதல் வஹி அருளப்பட்ட முறையினை விளக்குக.
(iii) அல் - குர்ஆன் தொகுப்பில் கலீபா அபூபக்ர் (ரழி) கால முயற்சிகளை விபரிக்குக.
(iv) கலிபா உஸ்மான் (ரழி) அவர்கள் 'ஜாமிஉல் குர்ஆன்' என அழைக்கப்படுவதற்கான காரணத்தை விபரிக்குக.

**5.** (i) ஹராம், ஹலால் என்பவற்றை வரைவிலக்கணப்படுத்தி, இயல்பாகவும் பெற்றுக்கொள்கின்ற வழிமுறையிலும் ஹராமாக்கப்பட்டுள்ள உணவுப்பொருட்களை வகைப்படுத்திக் காட்டுக.
(ii) ஹராமான உணவுப்பொருட்களின் நுகர்வை என் தவிர்த்துக்கொள்ள வேண்டும் என்பதற்கான காரணங்களை விளக்குக.

6. (i) இஸ்லாமிய பொருளாதார முறையில் வியாபாரத்துக்கும் வட்டிக்குமிடையிலான வேறுபாட்டை விளக்குக.

(ii) சேவைத் தொழிலில் பின்பற்ற வேண்டிய வழிமுறைகளாக இஸ்லாம் குறிப்பிட்டுள்ள விடயங்களை விபரிக்குக.

7. (i) இஜ்திஹாத் என்றால் என்ன? இஜ்திஹாத் காண வேண்டிய தேவை எப்போது ஏற்படுகின்றது என்பதை வரலாற்று ரீதியான ஆதாரங்களுடன் எடுத்துக்காட்டுக.

(ii) இஜ்மா, கியாஸ் என்பன கையாளப்படும் முறையினை உதாரணங்காட்டி விளக்குக.

8. (i) ஆன்மீக மேம்பாட்டுக்கான வழிமுறைகளை எடுத்துக்காட்டுக.

(ii) தௌபா என்றால் என்ன என்பதை விளக்கி, அது அங்கீகரிப்படுவதற்கான வழிமுறைகளை விளக்குக.

* * *